ருரியமெய்ஞ்ஞானயோகத்தினுலரன்
றுரியயோகத்தினைச்சோதியார்களே. (ங)

வேறு.

ஒருகணமிருப்பன்றெய்வவுருவினிலீசன்ருன்மற்
றிருகணஞ்செங்கோலோச்சுமிறையவர்பாலிருப்ப
னொருமறையவர்குழாத்துளம்பூவீழளவிருப்பன்
றுரியயோகிகளுளத்திற்றூங்குவனிருந்தெப்போதும். (ச)

சரிதைகிரியாயோகவிலக்கணம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கசுo.

---

## ஞானநிட்டையிலக்கணம்.

சராசரப்பொருள்கடோறுந்தங்கிநின்றவற்றின்றன்மை
விராவுதலின்றியொன்ருய்விமலமாய்விண்ணினுெய்தாய்ப்
பராபரவெளியாய்நீங்காப்பாசசாலங்கடந்த
நிராமயசிவந்தானுகிநிற்பதுஞானநிட்டை. (க)

மத்திமவுடலுமுகாவளர்கரணந்தானுகா
மொய்த்தவிந்தியந்தானுகாமூலவாயுவந்தானுகா
சித்திரதீபம்போலச்சீவபாவங்கழன்று
நித்தியசிவந்தானுகிநிற்பதுஞானநிட்டை. (உ)

கன்மவாதாரமாறுங்கடந்துகற்பனைகடந்து
வுன்மனைகடந்துசீவவுணர்வையுங்கடந்துமேலாய்ச்
சின்மயமாகிநின்றசிற்பரநிலைகடந்து
நின்மலசிவந்தானுகிநிற்பதுஞானநிட்டை.

மக்களுமனையுநீத்துமாதராராசைநீத்துச்
சொர்க்கமேலாசைநீத்துச்சுத்தனுய்ப்பற்றொன்றின்றிக்
கற்கவேண்டியதுநீத்துக்கருதிருவினையுநீத்து
நிர்க்குணசிவந்தானுகிநிற்பதுஞானநிட்டை. (௪)

வேறு.

சிந்தனைபுறஞ்செலாச்சிவோகம்பாவனை
சந்ததமுனுற்றிடிற்சமாதிவந்துறு
மந்தநற்சமாதியாலறிவுமேலிடு
மிந்தநன்னிலையிலேயிருக்கற்பாலையே. (௫)

ஆங்கறியாமையுமறிவுநீங்கவே
யோங்கியவறிவொடுமொன்றுபட்டவண்
டேங்குபேரானந்தத்தூக்கம்வந்துறு
மூங்கைகாண்கனவெனமுத்திகாண்டியே. (௬)

வேறு.

பாவனுதேதந்தன்னிலுடனீறும்பதிந்துநிற்பாய்
பாவனுதீதந்தன்னினெஞ்சகம்பதியாதாயின்
பாவனைதனிலேநெஞ்சைப்பழக்கிடுபழுத்தகாலைப்
பாவனுதீதம்வந்துபதிந்திடும்பான்மையோடே. (௭)

ஞானநிட்டையிலக்கணம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௬௬௬

---

## ஐம்புலனுல்வருமிலக்கணம்.

சத்தத்தாலசுணமாயும்பரிசத்தாற்றந்திமாயும்
வெற்றிசேருருவத்தாலேவிட்டிலம்பறவைமாயும்

பற்றியாரிரதத்தாலேபாணிமீனங்கண்மாயும்
மொய்த்தகந்தத்திஞலேமூசுவண்டினங்கண்மாயும். (௪)
ஒதியவசுணமாதியொன்ெறான்றாலழியாநிற்குங்
காதிஞற்றேக்கான்மூக்காற்கண்ணிஞலுவாலிந்தச்
சாதிமானிடர்களெல்லாமஞ்சிஞற்சாகாநிற்பர்
போதமேவிட்டகாலம்புலன்வழிப்போகாரன்றே. (௫)

வேறு.

ஐம்புலன்வழியோடிமானிடரெலாமழிவார்
ஐம்புலன்வழிந்தாவிமேலமரருமலைவார்
ஐம்புலன்வழியடைத்தவன்யோகியேயன்றி
ஐம்புலன்வழியடைத்தவருலகினில்யாரே. (௬)

ஐம்புலனால்வருமிலக்கணம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கசுசு.

ஐம்புலன்வென்றவறிஞரிலக்கணம்.



ஐம்புலனடக்கலாலுமறிவினையறிதலாலு
மின்பூதன்பங்களெல்லாமியல்பெணவொறுத்தலாலுஞ்
செம்பொருளறைதலாலுஞ்சிவோகம்பாவித்ததாலும்
நம்பனையகத்துணர்ந்தஞானியென்றறியலாமே. (௧)
வேதநூலுணர்தலாலும்விதிவழியொழுக்லாலுஞ்
சூதகந்துறத்தலாலுஞ்சுகமயமாதலாலும்
பேதமற்றிருக்கையாலும்பெரியவர்கூட்டத்தாலு
நாதனையகத்துணர்ந்தஞானியென்றறியலாமே.

ஐம்புலன்வென்றவறிஞரிலக்கணம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஎக.

## சந்நியாசியிலக்கணம்.



ஆக்கைக்குஞ்சாக்கிரமேயனைத்திற்குஞ்சாக்கிரமே
போக்கொடுவரவுமில்லைபுண்ணியபாவமில்லை
வாக்கொடுமனமுமில்லைமந்திரந்தியானமில்லை
சாக்கிரமாத்திரமேயென்றுதெளிந்தவன்சந்நியாசி. (௧)

வேறு.

அறிவிலறிவாயகண்டிதமாயனந்தானந்தமயமாகிச்
செறியும்பரமசிவந்தன்னைத்தன்னுட்கண்டுதியானித்துக்
கறவையருந்தப்பால்சுரக்குங்காலமேனுங்கடைப்பிடிப்போர்
பிறவிக்கடலைக்கடந்தோர்களவரேயுலகிற்பெரியோரே. (௨)

மண்போற்பொருமையுடையோருமதிபோற்சாந்தமுடையோரும் [க்
புண்போலுடலைப்புனைந்தோரும்புனல்போலொழுக்கம் பூண்டோரு
கண்போலிரக்கமுற்றோருங்கனல்போற்புசிக்குங்கதியோரும்
விண்போலறிவையறிந்தோரும்பிறவாரிந்தமேதினிக்கே. (௩)

சந்நியாசியிலக்கணம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௭௪.



## அதிவன்னச்சிரமியிலக்கணம்.



ஊன்றுமூன்றவத்தைக்கப்பாலுயர்மூத்தனாகியந்த
மூன்றவத்தைக்குஞ்சான்றாய்மூதவொளியாய்ப்பிறக்கித்
தோன்றுமாதேவதேவையெவண்சும்மாவனுபவிப்போ
னன்றவனவனேமேலாமதிவன்னச்சிரமியாவான். (௧)

வேறு.

நிறைந்தமாகடற்போலுயர்நெடுமறைமுடியிற்
சிறந்தபோதமாவாக்கியசிறவணத்தாலே
யிறந்துசிந்தையினூற்றனையீச்சுரனாக
வறிந்தவன்சொலுமதிவன்ணாச்சிரமியாவானல். (௨)

வேறு.

வருணமாச்சிரமுமாகிமலினதேகத்தின்கண்ணே
கருமலிமாயைதன்னாற்கற்பிக்கப்பட்டதெல்லாம்
பொருவருபோதனாமெற்கெப்போதுமில்லையென்றே
யருமறையாலுணர்ந்தோனதிவன்ணாச்சிரமியாவான். (௩)

சொன்னத்திற்கடகமாதிகழணிதோன்றுமாபோ
லென்னிடத்தகிலமெல்லாங்கற்பிக்கப்பட்டதென்றே
பன்னுமாமறையந்தத்தாற்பகுத்தறிந்தனுபவித்திங்
கன்னியமிலாமைக்கண்டோனதிவன்ணாச்சிரமியாவான். (௪)

ஆதித்தன்சன்னிதானத்தகிலஞ்சேட்டிக்குமாபோற்
போதத்தென்சன்னிதானத்திற்புவனஞ்சேட்டிக்குமென்றே
வேதத்தினர்த்தத்தாலேமெய்ப்படவறிந்துணர்ந்தோ
னாதித்தனிவனேயென்னவதிவன்ணாச்சிரமியாவான். (௫)

இப்பியிற்பிராந்தியாலேயிரசிதந்தோன்றுமாபோன்
மெய்ப்படுமென்னிலிந்தவியன்சகமுதித்ததென்றே
யிப்படியாவனேனுமெழின்மறைமுடிவினாலே
யற்புதவறிவுணர்ந்தோனதிவன்ணாச்சிரமியாவான். (௬)

பறையர்தம்முடம்பின்கண்ணும்பசுவாதியுடம்பின்கண்ணு
மறையவருடம்பின்கண்ணும்வானவருடம்பின்கண்ணு •
நிறையுமாகாயம்போலநிற்குமாதேவன்றானென்
றறிவினாலறிந்துணர்ந்தோனதிவன்ணாச்சிரமியாவான் (௭)

இந்தஞானத்தினாற்றன்னஞ்ஞானமிறக்குமத்தாற்
றொந்தமாந்துவிதவத்துதொலைந்திடுந்தொலைந்தவத்தாற்
புந்திதானசிக்குமத்தாற்புகழிகழ்நசிக்குமத்தா
னந்திடுங்குடும்பமத்தானவனுஞ்சொரூபந்தோன்றும். (௮)

பாம்பிதென்றுணர்ந்தபோதுபழுதையேயில்லைவெய்ய
பாம்பிதன்றெனவுணர்ந்தாற்பழுதையேயானாற்போலச்
சோம்புறுகுடும்பியென்னிற்றுக்கனுறசீவனாகுஞ்
சோம்புறாக்குடும்பியென்னிற்றுளறுபிரமமாவான். (௯)

அதிவன்னாச்சிரமியிலக்கணம் முற்றிற்று

ஆ திருவிருத்தம்-௧௮௫

---

## மகாவாக்கியவிலக்கணம்.

ஆதிதிருநான்மறைமுடியிலறையுந்தத்துவமசியென்றே
யோதிலதுநீயானாயென்றுரைக்குமும்மைப்பதமாகப்
போதமுடையோயிதன்பொருளையெவ்வாறெடுத்துப்போதிப்பேன்
பேதமகன்றவுள்ளத்தாற்காணும்பெரியவாக்கியமே. (௧)

வேறு.

கன்னனான்புளிஞனென்றேகவலையுற்றழுங்குங்காலைக்
கன்னநீகிராதனன்றுகௌந்திபுத்திரனென்றாற்போ
லன்னியவுடனானென்றேயயர்ந்துளமழியேன்மைந்த
வன்னியமென்றுகண்டவறிவுநீபுணர்ந்துகொள்ளே. (௨)

கல்லெலாமெறிந்துமீதிக்கையினையெறிவாருண்டோ
சொல்லியகருவியெல்லாந்தொலைத்தவன்மீதியன்றே
வல்லநீரவனேசோதியாகியபிரமமாவா
னெல்லையின்மறைகளெல்லாமிவ்வணமுரைக்குமன்றே. (௩)

வேறு.

ஒருவனொருதேயத்திற்பிரமசரியாயுற்றான்
மருவிமற்றோர்நாட்டகத்தின்மகிழ்கிரகியாயினான்
பரவிபின்னோர்மண்டலத்திற்பகர்துறவியாய்நடித்தான்
விரவியகோலம்போக்கின்வேறில்லையவனிவனே. (௪)

வேறு.

ஓடுமாநதிகடந்தோரொன்பதுபேரையெண்ணித்
தேடும்பத்தாமனைக்காணான்றிகைத்துநின்றலறுகிற்ப
நீடியவொருவனாலேநீபத்தானென்னலோடும்
வீடியதுயரமெல்லாம்வியப்பினையடைந்தானன்றே. (௫)

அன்னியகருவியெல்லாநாமலவென்றறிந்தோன்
பின்னரக்கருவியெல்லாம்பிரித்தவன்றனைமறப்ப
மன்னியசேடநீயேயென்றுமாதவத்தின்வந்த
செந்நிலைக்குரவன்சொல்லாற்றெளிவதுஞானமாமே. (௬)

மச்சுக்கூப்பிட்டுதென்றேமதிப்பவருண்டோவந்த
மச்சுளேயொருவனன்றிமச்சுக்கூப்பிடுமோபேதாய்
நச்சியதேகசேட்டையாவையுநாடிப்பார்க்கி
லச்சுளேநின்றவான்மாவாலெனவாய்ந்துகொள்ளே. (௭)

முப்பகைகடந்துஞானமூத்திரைதிகழவேதஞ்
செப்புமாவாக்கியத்தின்றெரிசனங்கிடைத்தமேலோ
ரப்பிரமேயமானவறிவொடுங்கலவாராயி
னிப்புவிதன்பான்மீட்டுமெய்துவரையமின்றே. (௮)

வேறு.

பொன்னையன்றிப்பூணில்லைபூணையின்றிப்பொன்னில்லை
யென்னையன்றிச்சிவனில்லைசிவனையன்றியானில்லை

யின்னவண்ணமறிந்தோனேயீசன்றனையுமறிந்தோனு
மின்னவண்ணமறியாதானீசன்றனையுமறியானே. (௯)

வேறு.

இறையறிவாயிருந்துநின் மலன்றன்னைத்தேடி
மறைமுதனூலாராய்ந்தும்பின்னருமயங்குந்தன்மை
யிறைவனேயெனக்குநாக்குண்டில்லையோவென்றுகேட்க
வறைவதுநாக்கேயென்னவகந்தெளியானைப்போலும். (௧0)

ஆதவன்றன்னைப்பார்த்திட்டகிலத்தைப்பார்த்தபோது
வாதவனொளிமேலிட்டேயகிலந்தோன்றுதவாபோற்
சேதனச்சிவத்தைநோக்கிச்செகத்தினைநோக்குங்காலைச்
சேதனச்சிவமேலிட்டுச்செகமெலாமறைந்துபோமே. (௧௧)

வேறு.

என்றுமிருந்தபடியிருக்குமியல்பேயென்னுமொருவேத
மொன்றேயொழியவிரண்டாம்வத்தில்லையென்னுமொருவேதம்
வென்றிப்பரமுநீயும்வேறில்லையென்னுமொருவேதந்
தன்றுமதுவேநீயானுயென்றேசொல்லுமொருவேதம். (௧௨)

வேறு.

நாலுவேதமுந்தத்துவமசியெனநவிலுஞ்
சாலநீர்தெளிந்துறுதிகொள்வீரெனச்சாத்திப்
பாலலோசனன்மவுனமுற்றிருந்தனன்பகுவக்
கோலநால்வருமிட்டையைக்கூடினரன்றே. (௧௩)

மகாவாக்கிய பிலக்கணம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௧௧௬.

## அனுபவவிலக்கணம்.



ஊசலாடுளமுமின்றியுருவருவுபயமனமுக
கோசரவகோசரங்கள்குறிகுணபேதமின்றிப்
பாசசாலங்கடந்துபராபரைக்கப்பானின்ற
வீசனையறிந்தஞானிக்கினிப்பிறப்பில்லையன்றே. (க)

சிறையறக்கடலொடுங்குஞ்செறிநதிக்குலங்கள்போலு
மறகுறவேடுநீக்கமன்னனைக்கூடல்போலு
மறிவறியாமைநீக்கவறிவினுளறிவாய்நின்ற
விறைவனைக்கூடுஞானிக்கினிப்பிறப்பில்லையன்றே. (உ)

வேறு.

அரியணையிலிருந்துலகவரசாட்சிபுரிந்தாலுமங்கையேற்றுத்
தெருவுதொறுந்திரிந்திரந்துதின்றாலுமிளம்பருவத்தெரிவைமாரைப்
பிரியாமலிருந்தாலும்பிரிந்துதவம்புரிந்தாலும்பேசிற்றெல்லாம் [றே.
விரிசிவன்முத்தனுக்கிங்குடம் பாடேயன்றியொன்றும்விரோதமின்

வேறு.

ஆயிரமடந்தை யாரகந்தோய்ந்துநான்
றூயவனென்றுமால்சூளுஞ்சாற்றினன்
காயமுங்கரணமுங்கடந்ததன்மையா
னீயுமந்நிலையிலேநிற்கப்பாலையே. (ச)

அறுசுவை யடிசிலையாரவுண்டவன்
வெறுமுபவாசிநானெனவிளக்கினன்
சிறுநுதற்பேதையைத்தினமுஞ்சேர்ந்தவன்
றுறவிநானெனவுளந்துலங்கக்காட்டினன். (ரு)

வேறு.

கேவலச்சனகன்முன்னாட்கேள்பகையிரண்டுமின்றி
மேவியசுத்தமென்னுமெல்லணைமீதிருந்து
சாவுயர்பிறப்புமில்லாத்தத்துவச்செங்கோலோச்சிப்
பாவனையிலாதகானம்படர்ந்துகுமாறினேனே. (ச)

அநுபவவிலக்கணம்-முற்றிற்று.

ஆகு திருவிருத்தம்-உ0உ.

---

## சிவயோகவிலக்கணம்.

காமமாதிகளைநீத்துக்கரணவாதனைகடந்து
நாமதுவெனுஞ்சம்பந்தஞானமேஞானமாகி
யோமொழிப்பொருளைத்தேறியுணர்வுணராமைபோக்கி
யாமைபோலைந்தடக்கிநிற்பதேயமலயோகம். (க)

அறுவகைச்சமையத்தோர்க்குமதீதமாயகளமாகி
மறுவறுபொருளாயொன்றாய்மன்பதைதொறுநிறைந்து
குறைவறுபிரமாமேயென்றுகோசங்கணீங்கி
யறிவுருவாகிநிற்றலழகியயோகமாமே. (உ)

உடலொருமுயிருமாகியுயிர்தொறுமுணர்வுமாகிச்
சடமசடங்கடோறுஞ்சாக்கியுமாகிநின்ற
வடல்புனைசிவனார்நம்மையன்றிவேறில்லையென்றே
யுடைகுடவிசும்புபோலொன்றுதலேயோகமாமே. (ங)

சிந்தையைப்புறத்தேவிட்டுத்தேகமேநாமென்றன்னி
யந்தமில்போகம்வேண்டியார்வமீதூரநோற்குஞ்

சந்தமற்றொளிருமந்தயோகியைச்சந்தித்தோரும்
வந்தனைசெய்துளோரும்பெறுவர்மாவிரையவைப்பே. (௪)

ஆகையாற்கருத்தடங்கியசைவறலியோகமாகு
நாகமார்முழைஞ்சுபூங்காநதிபாழுங்கோயிலாதி
யோகதானங்கள்புக்கியுயூர்சிவோகபாவித்துத்
தேகமாதிகணானல்லவென்றுசித்திரம்போனிற்பாய். (௫)

இம்முறைசிவயோகத்திலிருப்பவர்சீவன்முத்தர்
நன்மையினாதந்தோன்றாநவவிதங்கடந்துபோனாற்
செம்மையசுவானுபூதிசெனித்திடுமனந்தானந்த
விம்பிதர்தோய்ந்துந்தோயாதிருப்பர்கள்விதேகமுத்தர். (௬)

காட்டெரிபிரசுணங்கள்கண்படுவரிமாவேங்கை
வீட்டுறுபுலவன்றாதால்வெருவுறுதிருக்கும்யோகி
நாட்டமூன்றுடையநாதனடிவலநண்ணலாலும்
வேட்டுறுபுலனொடுங்கிவிவேகமேவிடுதலாலும். (௭)

மித்தையாமுடலமென்னவிவேகமேவிடுதலாலே
சித்தனானெனும்விவேகநேரிடும்நேர்ந்தகாலை
முத்தர்பேரவைகிடைக்குங்கிடைத்தலான்முதிர்ந்தஞானஞ்
சித்தியாமன்றேசீவன்முத்தனாய்ச்சிவனுமாவன். (௮)
காசியிலிறக்கமுத்திகமலையிற்பிறக்கமுத்தி
தேசுறுதில்லைமன்றுட்டெரிசிக்கமுத்தியென்ப
ராசையையிறக்கமுத்தியாருயிர்பிறக்கமுத்தி
யீசனைக்காண்முத்தியெதுவரிதானமுத்தி. (௯)

சிவயோகவிலக்கணம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௨௧௧.

---

## வாதனைமாண்டாரிலக்கணம்.

இல்லறம்பொருளெனவிருந்தகாயிப
வல்லல்சேர்வாழ்க்கையினையிழந்திறப்பினு
மெல்லையில்ஞானவின்பத்தையெய்தியே
புல்லியும்புல்லிடாதிருப்பர்புண்ணியோர். (௧)

போதெலாமவத்திலேபோக்கிடாவகை
சாதலும்பிறத்தலுந்தணந்தஞானியர்க்
காதரம்பெருகிடவடிமைசெய்குவார்
காதகங்கரத்தையுங்கடந்தகாரணர். (௨)

வேறு.

சாத்திரஞ்சமயம்வேண்டார்தத்துவக்கத்துவேண்டார்
கோத்திரங்குலங்கள்வேண்டார்கூறுமாவிரதம்வேண்டார்
மூர்த்திசேவைகளும்வேண்டார்முன்னவன்பூசைவேண்டார்
தீர்த்தமும்வேண்டார்ஞானச்சின்மயமானமேலோர். (௩)

உம்பர்வாழுலகும்வேண்டாருலகரசாட்சிவேண்டார்
பொன்புனைமகளிர்வேண்டார்புண்ணியபாவம்வேண்டா
ரின்பொடுதுன்புவேண்டாரிறப்பொடுபிறப்பும்வேண்டா
ரைம்புலப்பகையைவேண்டாரறிவினையறிந்தமேலோர். (௪)

வேறு.

அன்னமயமுதலாகவானந்தமயமீறாய்ப்
பின்னநிலையிவைகடந்தபேரின்பசாகரத்து
ளின்னபடியென்றறியாதிருந்தசிவயோகிக்குச்
சொன்னமகளும்புவியுந்துரும்பாகத்தோற்றுமால். (௫)

வாதனைமாண்டாரிலக்கணம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௨௧௯.

## பிராரத்தவிலக்கணம்.



வேம்புறுபுழுவைவாங்கிமென்கரும்பிடைவிட்டாலும்
வேம்பையேநோக்கிப்பின்னும்வியப்புறுமாறுபோலச்
சோம்புமூன்றவத்தைநீக்கித்துரியத்தில்வைத்தபோதுஞ்
சோம்புமூன்றவத்தைதன்னைத்தோயவேவினைக்குஞ்சீவன். (க)

பாசத்தைநீக்கியாசான்பதியிடைப்பதியவைத்தும்
பாசத்தைமீட்டுநோக்கிப்பரிந்திடும்பசுவின்றன்மை
மாசற்றவுவரைப்போக்கிமலைநிசைவைப்பமேக
மாசற்றவரையைநீங்கிவாரியிற்புகுநீர்போலும். (உ)

பிராரத்தவிலக்கணம்-முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-உகஅ.



## சிவத்துரோகவிலக்கணம்.



சுருதிகண்முறைமுறைதுதித்தகத்திய
னிருவினைக்குறும்பெறியெதியொடும்வரப்
பரசிவமிவரெனப்பதைத்தெழாமையால்
வரனெனுமாதவன்மகிடமாயினான். (க)

பாசமோசகன்சிவன்பரசுவார்வினை
நாசமாக்குவனெனமறைநவிற்றியு
மீசனைப்புகழ்ந்திடாதிகழ்ந்ததக்கனு
ராசுறுதகர்முகமாயினாரரோ. (உ)

சிவத்துரோகவிலக்கண-முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-உஉ0.

## சுவானுபவவிலக்கணம்.



நன்னெறியறிதருநல்லமாணனே
யென்னனுபவமெலாமெடுத்தியம்பினே
னுன்னனுபவந்தனையுரைத்தியென்றலுந்
தன்னனுபவந்தனைச்சாற்றன்மேயினன். (க)

வேறு.

ஆகிரின்றழிதலாலுமருவருப்புடையதாலுங்
காகநாய்கவர்தலாலுங்கனலிடைப்படுதலாலுஞ்
சோகமேவிளைத்தலாலுஞ்சுகதுக்கமறியாத்தாலுந்
தேகநானல்லவென்றுந்தேகிநானென்றுங்கண்டேன். (உ)

இந்தியமான்மாவென்பரிறைவநின்றிருநோக்கில்லார்
முந்தியபிராணன்றன்னையுயிரெனமொழியாநிற்பர்
சிந்தையைமனவகத்தைப்புந்தியைச்சிலவென்பர்
சந்துறுமிவைகட்கெல்லாஞ்சாக்கிநானென்றகண்டேன். (ங)

பிண்டமாமுடனல்லேன்பிராணவாயுவுநானல்லேன்
கண்டவைம்பொறியுமல்லேன்கரணமோர்நான்குமல்லேன்
பண்டையவறிவனென்றன்னருள்கொண்டுபார்க்கி
லெண்டிசைகீழ்மேலெங்குமேகனுயிருக்கின்றேனே. (ச)

வேறு.

தூலத்தனுவுநானல்லேன்சூக்கத்தனுவுநானல்லேன்
மூலத்தனுவுநானல்லேன்மும்மைத்தனுவும்பொய்யன்றோ
ஞாலத்தனுவைநானென்றேநம்பிக்கெட்டேனெங்காலஞ்
சாலத்தெளிர்தேனினிஞானதனுவேயெனக்குத்தனுவென்றே.

வேறு.

கானலைநீரென் றன்னிக்காதலித் திடுவார்போல
ஆனுடனுனென் றன்னிபுணர்வினைப்பிணிந்திருந்தேன்
கானலைநீரன்றென் றுகை விடுவார்கள்போல
ஆனுடனானன்றென்றேபுணர்வொடுமுறங்கினேனே. (௬)

ஊனுடல்பொறிபிராண னுறகரணங்களொன் றுங்
கானகங்கடந்தஞ்ஞானக்கசிருட்பாப்புநீக்கித்
தானெனுஞ்சிறார்நீத்த தத்தற்பரைப்பொழிலினின்று
மோனியாய்ஞானந்தமுத்திமாநகரங்கண்டேன். (௭)

கானகம்போலெங்கணுமருவியெப்பொருளுந்தானுய்ச்
சூனியப்பொருளாயொன்றாய்த்துரியமுங்கடந்தபாழாய்
ஞானமாத்திரமாய்நின்றநாதாந்தவின்பந்தனைத்
தானறிந்திருப்பதல்லாற்சாற்றிடப்படாதேயெந்தாய. (௮)

வேறு.

எல்லாமிறந்தயோகியர்க்குமெட்டாதிருந்தபேரின்பை
யெல்லாமானெனறசங்கரிக்குமேமையறியாப்பேரறிவைச்
சொல்லார்மனத்தாரிறந்திருந்ததுரியாதீதப்பெரும்பாழைச்
சொல்லாலுரைக்கப்படுங்கொல்லோவென்போல்வந்தவுயோனே ()

வேறு.

ஆசையாலிதுவேசிவவறிவையுங்கடந்தமுத்தி
யோகமாமறையின்சென்னியுபரிடத்துமீதே
சேகறமன்றதாயிந்தத்தேகம்போமளவுநிற்பாய்
சோகசட்கத்தால்வெட்டித்துமியெதிர்பிறவியெல்லாம். ()

சுவானுபூதியிலக்கணம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-உ௩௰.

## குருதோத்திரம்.



நாயனைய காயனுக்கிக் கண்டனைய கண்டனுக்கிப்
பேயனைப்பிரமமாக்கிப்பிறப்பிறப்பிலாமையாக்கித்
தாயினுமினியனாகிவந்தெனைத்தகைந்தாட்கொண்ட
ஞாயசற்குரவனின்னைத்தொழுந்தொறுங்களிதுளங்கும். (௧)

வேறு.

ஆழ்ந்தேகிடந்தேன்பவக்கடலிலனேககாலம்புகலின்றிச்
சூழ்ந்தேகருணையாலெடுத்துத்துரியக்கரையிற்சேர்த்தாய்க்கு
வீழ்ந்தேவீழ்ந்தேபணிந்திறைஞ்சிவியந்துவியந்துமகிழ்க்கடலில்
வாழ்ந்தேனவாழ்ந்தேன்கைம்மாறுகாணேன்வலியுந்தடுத்தாய்க்கே.

வேறு.

மும்மாயைக்கப்பால்முழுப்பாழுக்கப்புறத்தே
சும்மாவிருக்கத்துரியங்கடந்தநலச்
சிம்மாதனமளித்தசிவஞானதேசிகற்குக்
கைம்மாறுபோதமலாற்காணேன்கடையேனே. (௨)

உண்ணுதசோறுமுடுக்காதவத்திரமும்
பண்ணுதபாயும்படுக்காதரித்திரையு
மெண்ணுமனுவுமியம்பாததோத்திரமுங்
கண்ணலளித்தார்க்குக்கைம்மாறுகாணேனே. (௩)

சீராதவைம்பொறியுந்தீர்த்துச்சிவமாக்கிப்
பேராதவானந்தப்பிறங்கண்மிசைவைத்தாருக்
காராதவன்பாலகங்குழைந்துமெய்யரும்பிப்
பாராததெண்டனிட்டுப்பத்திசெயக்கடவேனே. (௪)

கல்லாலின்கீழிருந்தகண்ணுதலென்போலாகிக்
கல்லாவுலகிற்கருணையொடும்வந்தெனக்குச்

சொல்லாதசொல்லையொருசொல்லாலுரைத்தார்க்குச்
சொல்லாதசொல்லானற்றோத்திரங்கள்செய்வேனே. (௬)

வேறு.

ஒன்றென்றும் பலவென்று முபயமென்று முருவென்று மருவென்று முறைவதென்று, நன்றென்றுந் தீதென்று நானேயென்று ஞானமென்று ஞேயமென்று ஞாதாவென்று, மன்றென்று மாமென்றுஞ் சமயப்பேய்க ளறைகின்ற பிணக்குவழியனைத்துநீத்துக், குன்றலிலா வானந்தக் குரவனின்னைக் கும்பிட்டே னென்பிறவி பின்பிட்டேனே. (௭)

செறிவாகு மலமற்று மாயையற்றுத் திரிவிதமாங் கன்மமலத்திரளுமற்றுப், பிறிவாகுங் குணமற்றுக் குறியுமற்றுப் பேதாபேதங்களற்றுப் பேச்சுமற்று, வறியாமை யறிவற்று வனந்தகோடி யாதவர்போ லெழுகின்ற பரையுமற்றுக், குறியாத வானந்தக் குரவனின்னைக் கும்பிட்டேனென்பிறவி பின்பிட்டேனே. (௮)

பொய்யாத புனன்மூழ்கிச் சாந்தமென்னும் பொடிபூசிக் கருணைமணி புனைந்தெஞ்ஞான்று, நையாத வுளமெல்லா நையநாவா னவிலாத மாமனுவை நவின்றுமேலை, யையாறு மாறாறுங்கடந்துநின்ற வானந்தத்தேசிகநின் னடிப்போதுக்கே, கொய்யாத மலர்கொண்டங் கர்ச்சித்தேத்திக் கும்பிட்டே னென்பிறவி பின்பிட்டேனே. (௯)

ஆசிலன்னமயகோசந் தாண்டியப்பா லழியாத பிராணமயகோசந்தாண்டி, மாசின்மனோ மயகோசந் தாண்டியென்று மாறாவிஞ்ஞானமய கோசந்தாண்டி, நாசமுறு மானந்த கோசந்தாண்டி ஞானவடி வாய்நின்ற குரவநின்னைக், கோசமெலா மற்றசிவ கோசியாகிக் கும்பிட்டே னென்பிறவி பின்பிட்டேனே. (௧௦)

தத்துவங்களாறாறும்பின்னிட்டப்பாற் றத்துவாதீதமாந்தன்னைக்கண்டு, பற்றொன்று மில்லாத பரையைக்கண்டு பரிந்துபரிந்துள்ளு

ருகி யதிலொடுங்கி, வெற்றவெறுமானந்த வுருவங்கண்டு விழையாம
ல்விழைந்தப்பால் வெளியைக்கண்டு, குற்றமெலாமறநீத்தங் கறிவாய்
நின்று கும்பிட்டே னென்பிறவி பின்பிட்டேனே. (கக)

வேறு.

பாசத்தாற்பாசியாகிப் பலபலபிறப்பிற்சென்று
பாசத்தாற்பிறந்திறந்து பலபலபோகந்துய்த்த
பாசத்தைத்தாளாற்போக்கிப் பதித்துவம்பதித்தநாதன்
பாசத்தைநினையுந்தோறும் பசுத்துவங்கழலுமன்றே. (கஉ)

ஒன்றென்பாரொன்றேயென்க வோரிரண்டென்பாரென்க
நன்றென்பார்நன்றேயென்க நவையென்பார்நவையேயென்க
வின்றென்பாரென்கவன்றி யுண்டென்பாருண்டேயென்க
வன்றிதாமென்றுமுத்தி யடியனேற்களித்தாளுசான். (கங)

வடக்குளேதெற்குந்தெற்கில் வடக்கையுங்காட்டுவார்போ
லுடற்குளேயுயிருமந்தவுயிர்க்குளேயுணர்வுங்காட்டி
நொடிக்குளேமலமதற்றி நுண்ணுணர்வாக்கிமீட்டும்
விடக்குளேபிறவாவண்ணங் காத்தருள்விகிர்தபோற்றி (கச)

அய்யமாங்காட்டைஞான வழலினாற்றகித்துப்பாதச்
செய்யதாமரைகள்சூட்டித் திவ்வியமணத்தணுக்கி
மெய்யடியாரைக்கூடும் விவேகமும்மெய்ம்மையில்லாப்
பொய்யடியாரைக்கூடாப் புந்தியுந்தந்தாய்போற்றி. (கரு)

வேறு.

தன்னுளுலகுமுலகதனிற் றனுமாகிச்சகசமாய்ப்
பின்னையபின்னையெனுஞ்சத்தி பிரியாதிருக்கும்பிரமமா
யுன்னுமுணர்வுக்குணர்வாகி யுருவாயருவாயுபயமுமா
யென்னுளிருந்தபரசிவத்தை நின்றுகண்டேனிறையோனே. (கசு)

மண்ணைவிழுங்கிப்புனல்கனலை விழுங்கிவாயுதனைவிழுங்கி
விண்ணைவிழுங்கிவெண்மதியை விழுங்கிவெய்யோன்றனைவிழுங்கி
மொண்ணையியமானையும்விழுங்கி முற்றும்விழுங்கிப்பற்பலவா
மெண்ணைவிழுங்கியிருந்ததனை நின்றற்கண்டேனிறையோனே. ()

தருக்ஷோத்திரம்-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-உசள.

## விட்பிதவிலக்கணம்.

காகுத்தன்பதந்தாக்கக் கல்லெழிற்பெண்ணானற்போ
லாகத்தனைக்கிடந்த வடியேனைப்பதந்தாக்கிப்
பாகத்தைவருவித்துப் பழமறையின்பொருடேற்றி
மாகத்தனைக்கிவித்தோய். மறவேனுன்றிருவடியே. (க)

எல்லாருங்களிதுளங்க விரும்பையிரும்பொன்னாக்கி
நல்லார்கடொழுந்தேவாய் நாட்டுகின்றனாயம்போற்
கல்லாதபுலையேனைக் கருணையினாற்கடைக்கணித்துப்
பொல்லாதபரப்பிரம மாக்கினையென்போல்வர்தே. (உ)

### வேறு.

அறுதிகேவலத்தினி லழுந்துமேற்குரீ
மறுதியகருவியான் மலத்தைநீக்கியே
சறுதவின்பந்தனைத் தந்ததேசிக
கறுவிலுமுன்னையே கருதற்பாலனே. (ந)

### வேறு

சோழையொதுக்கி யொருசொல்லாலானந்த
வாழ்வைப்பெருக்கி மலகன்மமாயையறப்

பாழிற்குடியேற்றிப் பரமசுகமெற்களித்தோன்
வாழிநெடுங்கால மாணாக்கர்க்கருள்புரிந்தே. (௪)

பாரோரும்விண்ணோரும் பங்கயன்மாலிந்திரனு
மாராய்ந்துங்காணா தலம்வந்துளந்தளர
வாராமல்வந்தெனக்கு மாறாதபேரின்பந்
தாராமற்றந்தார்க்குத் தனுவாதிகைம்மாறே. (௫)

விம்மிதவிலக்கணம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-உ௫.

## நூலருமையிலக்கணம்.

மைபயிலமிடற்றோன்சொன்ன வாதுளாகமத்திற்சொல்லு
முப்பொருள்விளக்கத்தாலே மும்மலங்களைந்தொன்றாய்
நிற்பதம்பெறுவர்மீண்டுஞ் சென்மவாரணியங்காணார்
தற்பரஞானத்தோர்கள் சமயசாத்திரமிகழ்ந்தே. (௧)

ஆகையாலிந்தநூலுக்கதிகாரி குடும்பந்துன்ப
சாகரமெனத்துறந்து சற்குருசாமிபாத
மோகமீதூர்ந்திழுக்க முறுக்கவிழ்கமலந்தேடுந்
தாகவண்டனையனாகித் தவிப்பவன்றானேயம்ம. (௨)

வேறு.

இந்நூலைப்பருவமிலார்க் கீயற்கவீந்தக்கான்
முன்னூலைச்சூத்திரர்பான் மொழிந்தகரிசுறுகின்றாய
கன்மாலைகுரங்கறியா நலம்போலுஞானத்தைத்
துன்மார்க்கரறியாத தோற்றம்போலுந்துணிந்தே. (௩)

வேறு.

வாழிசுயம்பிரகா சப்பெயரோன்மாணாக்கர்
வாழியெனத்தூக்கி மதிதந்தவார்கழல்கள்
வாழியொருமொழியான் மயக்கறுத்ததிருச்செவ்வாய்
வாழியருள்கொழிக்குந் திருவீதனமண்டலமே. (௪)

ஆக திருவிருத்தம்-௨௫௬.

---

பதிபசுபாசவிளக்கம்-முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

# வள்ளலார்சாத்திரம்.



மூன்றாவது

## சித்தாந்ததரிசனம்.



பாயிரம்.

### விநாயகர்துதி.

சீரார்சித்தாந்த தெரிசனத்தையாமோதக்
காரானைமாமுகனே கா.

அம்மையப்பனா யுயிர்க்காதார மாய் நிறைந்த
செம்மைசிவன் றாளென் சிரம். (௧)

ஒன்றாய னேகவித சத்தியா யுன்மனையாய்
நின்றாடன் பாத நினை. (௨)

சற்குருவாய் முன்னாட் சனகாதி கட்கருளா
முக்கணனை நாவே மொழி. (௩)

திருப்பா சுரத்தானற் சித்தாந்தஞ் செய்தோன்
றிருப்பாத மென்றன் சிரம். (௪)

நின்றதிருத் தாண்டகத்தா னீயிர்பொய்ப் போதமற
வன்றுரைத்தோன் றாளகத்து வைப் பாம். (௫)

வாழ்வா வதுமாய மென்றுரைத்தோன் மாமலர்த்தா
டாழ்வாமெப் போதுந் தலை. (க)

சிவபுரா ணத்தகவ லாலுயிரின் சிக்கறுத்தோ
னவமலர்த்தாட் சென்னிநயப் பாம். (எ)

சிவவாக்கி யதேவர் திருமொழியைக் கொண்டே
யவவாக்கி யத்தையடு வாம். (அ)

திருமூலர் மாலையெனுந் தெப்பத்தைப் பற்றிக்
கருவேலை யைக்கடப்போங் காண். (கூ)

மெய்கண்டேன் மேற்பிறவி காணேன் றிருவெண்ணெ
மெய்க்கண்டா னூலை விளைவி. (க0)

முன்னூலிற் சொன்னதொரு முப்பொருளை யும்விரித்திவ்
விந்நூலிற் சொல்வே னிசைத்து. (கக)

அவாக்கடலுள் வீழ்ந்தழுந்து மாருயிரைத் தூக்குஞ்
சிவாகமசித் தாந்தக் குறள். (கஉ)

பாயிரம் - முற்றிற்று.

---

## பதியியல்.

மதிதவழுஞ் செஞ்சடையோன் மாமலர்த்தா ளுன்னிப்
பதியியல்பைச் சொல்வாம் பணிந்து. (க)

பதியாவ தொன்றாய்ப் பரிபூ ரணமாய்த்
திதமாகி நிற்குஞ் சிவம். (உ)

அற்றார்கட் கண்ணிதா யல்லார்க்குச் சேய்மையாய்ப்
பற்றறற் றிருக்கும் பதி. (ங)

எங்குமிலை யென்பா ரிதயந் தொறுமறிவா
யெங்குமிருப் பானெம் மிறை. (ச)

உன்மனைக்குமேலா யுருவருவ மின்றாகிச்
சின்மயமாய் நிற்குஞ் சிவம். (ரு)

அசல னகளங்க னனந்த ரூபன்
சசிசேக ரன் சங்கரன். (சு)

சச்சிதா னந்தன் சதாநித்தன் சுத்தன்
மெய்ச்சருவா னந்த விம லன். (எ)

நிராமயனிற் சங்க னிராலம்பன் சோதி
பராபர னாதி பகவன். (அ)

விருப்புவெறுப்பில்லான் வேதவிதி செய்...
னெருப்புருவ னெங்கணிம லன். (கூ)

பத்தர்க்கெளியன் பதிதர்க்கறவரியன்
சித்தத்து ணின்றுஞ் சிவன். (கO)

ஊனக் கண்ணார்க்கொளித்து முட்புறம்பு மொன்றாய
ஞானக்கண் ணார்க்கருள்வ னாடு. (கக)

மலரயனா யாக்கி மாலாகிக் காத்திட்
டுலைவிலா னாயொடுக்கு வான். (கஉ)

பஞ்சவதி காரத்தாற் பாகம்வரு வித்துயிரைத்
தஞ்சரணில் வைக்கு மிறை தான். (கூ)

சிருட்டி திதி சங்காரந் திரோபாவ மான
வருட்டிறத்தோ டைந்தொழில்க ளாம். (கச)

தேகத்தின் மூன்மூன் றீஞ் சிவன்பான் மற்றிரண்டு
மாகத்தான் செய்வா னரன். (கரு)

அவிகாரி யீச னனுதிமுத்த னென்று
விவிகார முண்டோ விறைக்கு. (கசு)

ஐவகை யசத்தியினு லைந்தொழிலு மாருயிர்க்காய்ச்
செய்யாமற் செய்யுஞ் சிவம். (கஎ)

வாளிரவி சந்நிதியின் மலைமலர்ந்து வாடிடினும்
வாளிரவிக் குண்டோ மயல். (கஅ)

ஆக்க லளித்த லழித்தன் மறைத்தலரு
ளாக்க லிறைக் குண்டோ நுவல். (கசு)

அரையன்வறிதிருக்க வைந்தொழில்செய் வார்செய்
தரையன்மே லேறு மஃது. (உ0)

பரமன்வா ளாங்கிருந்து பரையைந் தொழில்செய்தும்
பரமன்மே லேறும் பழி. (உக)

ஐங்கரும சாக்கியா யப்பாலைக் கப்பாலாய்ப்
பங்கறனிற் பானெம் பரன் (உஉ)

அறிவுக் கறிவா யவிகாரி யாகி
யிறைதல் பதிசிச் சயம். (உரு)

கேவலத்துங்காணக் கிடையான் கிளர்ந்தெழுந்த
வாவல்சக லத்துமனு கான். (உச)

சாற்றிரண்டு மற்ற சமநிலைய சுத்தத்து
வீற்றிருப்ப னெங்கள் விமலன். (உரு)

ஆகி லவனை யறியப்ப டாவோபெண்
பாகம் பிரியாப் பரன். (உசு)

அறியாப் பொருளுமல னறிவாலுன் கண்ணு
மறியும் பொருளு மலன். (உஎ

ஆகாயம் போல வறிவாகி நிற்பானை
நீகா ணறிவாகி நின்று. (௨௮)

நீருக்குட்டப்பம்போ னின்னறிவி னின்றானைப்
பாரருட்கண் கொண்டு பரிந்து. (௨௯)

எள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்கு நிறைந்தானை
யுள்ளுக்குட் பார்நீ யுவந்து. (௩0)

எங்கு மிருப்பானை யேகமிரண் டென்னுமை
லெங்குமாய் நீகண் டிரு. (௩௧)

மோகமுறு பெத்தத்துண் மூடர்க் கிரண்டாகு
மேகமே முத்தருக்கீ சன். (௩௨)

இன்ப மயனீச னின்பம் விளைத்தலாற்
சம்புவெனும் பேருந் தகும். (௩௩)

குருவுருவங் கொண்டிக் குவலயத்துட் டோன்றிப்
பருவரலை நீக்கும் பரன். (௩௪)

போக்குவர வில்லாத பூரணா னந்தர்க்குப்
போக்குவர வுண்டோ புகல் (௩௫)

ஆருயிரி னுள்ளினிருந் தாங்காங் கறிவிப்பா
ராருயிரே மேனி யவர்க்கு (௩௬)

அறிவுக் கறிவா யறிவிப்பான் சில்லோர்க்
கறிவுருவு கொண்டருளு வான். (௩௭)

பார்த்தும் பரிசித்தும் பஞ்சமலக் கொத்தையெலா
நீத்தொழிப்பா னெங்க ணிமலன். (௩௮)

பக்குவர்க்குத் தோன்றும் பயன்கொடுக்கு மற்றொழிந்த
பக்குவர்க்குத் தோன்றியுமென் பாழ். (௩௯)

பாற்கடல்போ லாவி பலமீன்போ லாருயிர்கள்
பாற்கடலா லுண்டோ பயன். (௪0)

அருட்கண்ணார்க் கீசனலரொளியாய் நிற்பன்
மருட்கண்ணா ருக்கிருளா மன் (௪௧)

செங்கதிரோன் கண்துதயஞ் செய்தாலு நாட்டமிலோன்
செங்கதிரோ னில்லையெனுஞ் சீர். (௪௨)

மணவீரக்குக் காய மசையாம ஊினிற்பர்
சணதவின் பத்தைத் தழீஇ. (௪௩.)

பூனை விழிக்கியுறு பொங்குயிரு ளற்றதுபோல்
ஞானவிழிக் கில்லை நவை. (௪௪)

சிதம்பரமா மெங்குஞ் செறியினுமென் னாவி
மதமடங்கிக் காணு வகை. (௪௫)

கூடை யறியாக் குலவுங் கதிரவனை
மூகரறி யார்சிவனை முன். (௪௬)

கண்ணிரவி யின்றிக் கலந்தறியா தொன்றையுமக்
கண்ணுங் கதிருமொன்றே காண். (௪௭)

காக்கை விழிக்குக் கருமணியொன் றாற்போ
லாக்கைக்குச் சாக்கி யவன். (௪௮)

அத்துவித மொன்றேயா மாங்கிரண் டின்மையெனி
லத்துவித மன்றே வது. (௪௯)

துவிதமிரண் டாகுமத் துவிதமொன் றாகுந்
துவிதமயல் கெட்டோய் துணி. (௫0)

அத்து விதத்துக் கருத்தம் பலவென்னுஞ்
சிற்றறிவு கொண்டசில கீழ். (௫௧)

பதியியல் - முற்றிற்று.

## பசுவியல்.



சசிசேகரகுரவ ருடலைமேற் கொண்டு
பசுவியலினைப்பகருவாம். (க)

பசுவென்ப தான்மாமுப் பந்தமுள்ளா னன்றே
சசிசேகரனிறைவன் றான். (உ)

கட்டியவன் றனவிழ்க்கி னல்லாற்றன் கண்ணறிவா
லெட்டுணையுந் தானவிழ்க்கா தின்று. (ங)

ஆணவத்தான் மூடமா யன்றுமுத லின்றளவும்
வீணவத்தைக் குள்ளே விழும். (ச)

இருட்டறையிற் கண்ணனி லிளங்குழவி போலு
மருட்டறையி லாவி மயங்கி. (ரு)

மெய்ஞ்ஞானக் கண்ணை மிகமறைப்ப,வாவியர்
அஞ்ஞானக் கண்ணி லழுந்தும். (சு)

பாம்பின்வாய்ப் பட்ட பருதியைப்போ லஞ்ஞானப்
பாம்பின்வாய்ப் பட்டழுங்கும் பார். (எ)

உவர்மூடு சிந்து முமிமூடு நெற்போற்
சவியாளு மாணவத்தாற் றன். (அ)

ஈசனி ரங்கி யிணையில்கலைக் கரத்தாற்
பாச நெகிழ்த்திடலும் பண்டு. (கூ)

தனுவாதி நாலைத் தழுவிவெளிப் பட்டு
நனவாதி யைந்தினை நண்ணி. (க0)

யானென தென்னு மிருசெருக்கா லாருயிர்கள்
யோனிபே தத்துழலு முற்று. (கக)

புற்று றுகிடங்கள் புள்விலங்கு மானிடர்கள
சொற்றேவ ரேழ்வகைத்தோற் றம். (கஉ)

அண்டசஞ்சு வேதசமுற் பீசஞ்ச ராயுசங்கள்
மண்டியதால் யோனி வகுப்பு. (கங)

எண்பத்து ணன்கிலக்கம் யோனிதொறும் புக்கதுவாய்ப்
புண்பொதிபு மியாக்கை புணரும். (கச)

புல்லாய னேகவுருப்போனபினர் நல்லறகம்
புல்லாய்ப் பிறக்கவது போம் (கரு)

பூமரங்களாய்ப்பிறந்து புண்ணியனுக் கானமையாற்
போமரத்தி ஞர்பிறவி போல். (கசு)

புண்ணியதீர்த்தத்துட் புழுவாய்ப் பிறந்தமையாற்
பண்ணும் புழுப்பிறப்புக் காண். (கஎ)

புள்ளா யனேகவுருப் போயபினர்ப் புட்பிறவி
விள்ளுநதி தோய விரைந்து. (கஅ)

துட்டமிரு கப்பிறப்பிற் றுதைந்து நெடுங்காலங்
கட்டப்படு முயிரார் காண். (கக)

எல்லாவுருவு மெடுத்தெடுத்து நல்வினையா
னல்லா வுருவாகு நாடு. (உ0)

ஆனைந்து மைம்முகனுக் கபிடேக புண்ணியத்தா
லானுருவை நீங்கு மற. (உக)

ஆனுருவ நீங்குதலு மளவில்சிவ புண்ணியத்தா
மானிடரா யிங்ஙன் வரும். (உஉ)

வேதாக மம்வழங்கா மேதினியிற் போய்ப்பிறந்திட்
டாதார மின்றியலை யும். (உங)

உடம்புறுக மொவ்வா வுருவமெடுத் தப்பின்
விடம்புரையுந் தானம் விடும். (உச)

நல்லசிவ புண்ணியத்தா னல்லார் பயிரேய
மெல்லவரு மாவிக்கு மெய். (உரு)

கிடையாத வாக்கை கிடைத்துமெண்கொ லாவி
யடையாச் சிவனடி யாய்ந்து. (உசு)

இந்தமனி தப்பிறவி கொண்டறிவை யெய்தாழ
லந்தரிக்கு மைம்புலன் களால். (உஎ)

அன்னை புலகன்னை யப்பனம்மை யப்பனென்ற
முன்னுதலை புன்று துயிர். (உஅ)

ஒப்புக்கு வந்தாரை யுற்றார்பெற் றாரென்னுங்
கப்புவினை யான்மயங்கிக் காண். (உகூ)

மூர்த்தை வினையான் முகிழ்மூலயா ராசையெனும்
பந்தக் கடலுட் படும். (௩0)

என்றந்தை யென்றாய ரென்மனைவி யென்னொக்க
லென்சாதி யென்னவியம் பும். (௩க)

உயிர்ச்சார்வா லாவி புணர்வழிந்து காகங்
குயிற் சார்வை யொக்குங் குறி. (௩உ)

தானல்லாச் சங்கடத்தைத் தானென் றிறமாக்கு.
ஞானமிலா தாய நடர். (௩௩)

எல்லாமிறந்தாலும் யானிறவே னென்றோதுங்
கல்லாமை யாலுங் கடை. (௩ச)

பொருட்சார்வா லான்மாப் புழுங்குமெரி புக்க
கரிச்சார்வை யொத்துக் கடை. (௩ரு)

சனகாதிக் கீசன் றனித்திருத்தல் கண்டு
மனை வாழ்க்கை யைத்துறவாமல். (௩௬)

நல்லாரைத் தூடித்து நவைக ளொடுத்தேதிப்
பொல்லாரைக் கண்டுபுக ழும் (௩௭)

ஒழுக்கமுடை யார்சொல்லை யுற்றுக்கே ளாம
விழுக்கர்மொழி கேட்டு மிசைந்து. (௩௮)

என்னுடம்பி தென்கால்கை யென்வயிறீ தெனவிழிநா
வென்சென்னி யெனறமயங் கும். (௩௯)

ஆக்கை சடமென்று மான்மா வறிவென்று
நோக்காது நூலின் வழி. (௪0)

கன்மத்தா லாவிகறங்காய்ச் சுழன்றுழந்து
சென்மித் திறக்குந் தெரி. (௪௧)

தந்தைவிந்து வாகனமாய்த் தாயுதரத் தேநுழைந்து
பந்தப் படுமெதிபத் தும். (௪௨)

அன்னை யகட்டி லனேகதுய ரென்சொல்கே
னென்னைப் பிறவி யிது. (௪௩)

இனிப்பிறவே னீசனருள் பெற்றுய்வே னென்னு
நினைப்பு மறக்கு நிலத்து. (௪௪)

பிறக்கும் பொழுதுமிகும் பேரிடும்பை பின்னுந்
துறக்க முடியாத் துயர். (௪௫)

சுகர்வாம தேவர் துறந்தாரித் தன்மை
யகன்ஞாலத் தியார்க்கு மரிது. (௪௬)

குழந்தை பருவத்து [illegible]
தழுந்துந் துயரு [illegible] (௪௭)

காயவிளக் களித்த கண்ணுதலை யுள்ளாமன்
மாயையினை யுள்ளு மனம். (சஅ)

இல்லத் திருந்தெழிலா ரேந்திழையா லார்ப்புண்டு
புல்லிக் கிடக்கும் புயம். (சகூ)

வசம்புந் தசையு மலசங் குலமாம்
பசுந்தொடியைப் புல்லும் பசு. (ரு0)

நாற்ற விதழ்ப்புனலை நாளுமு லுண்ணும்பின்
காற்றுணையில் வீழுங் கரைந்து. (ருக)

இன்னணமா யாவி யிளமையினை நீத்திட்டுத்
துன்னுமுறு மூப்பைத் தொடர்ந்து (ருஉ)

நல்லிளமை காலத்தி னுதனைச்சற் றுன்னாது
சொல்மூப்பா லாவிகுலை யும் (ருங)

அமுதத்தூற் கால்கழுவி யாதனத்தைப் போடிச்
சவிதைவிசை மீயழுந் தளரி. (ருச)

காலபடர்க் கண்டஞ்சிக் கண்ணீர் சொரிந்தழுங்கி
யோலமிடு மந்தோ வுயிர் (ருரு

மாசற்ற சோதி மலரடியை யுன்னுமற்
பாசத்தை யுன்னும் பசு. (ருசு)

இவ்வண்ண மான்மா விருந்து பிறந்துழலு
முவ்வண்ண மின்றி யொதுங்கி. (ருஎ)

மாலாயய னாய் மகபதியாய் வானவராய்
மேலாய வாக்கைவிர வும். (ருஅ)

புண்ணியத்தான் மேலேறும் பாவத்தாற் கீழிறங்கும்
புண்ணியபா வத்தாற் புவி. (ருகூ)

ஈகைதவ மின்றி யிரக்கமறி வின்சொல்லு
மேக விருக்கு மிவண். (௬0)

அபுத்திபுத்தி பூருவத்தா லாங்கிருநா லெய்திச்
சுபுத்திவரு மாவி துலங் கும். (௬௧)

மூர்த்திகள்சே வித்தத்தாந் தீர்த்தத்துண் மூழ்கியத்துஞ்
க்ஷேத்திரத்திற் சென்மித்தத் தும் (௬௨)

தெய்வஞ் சிவமென்னுஞ் சித்தமுண்டா மக்கணமே
யுய்யுநெறி யுண்டா முயிர்க்கு. (௬௩)

ஈசனடி யார்க்காணி லென்புருகிக் கைகுவித்து
மாசில்சரி யைக்குள் வரும். (௬௪)

சென்றா லயந்தோறுந் தீபமல கிட்டுருகி
நன்றா மலர்தொடுக்கு நாடு (௬௫)

பருப்பதங்கே தாரம் பகர்காசி காஞ்சி
திருப்பதிநற் காளத் திரி. (௬௬)

கழுக்குன் றஞ் சோணகிரி கனகசபை யோத்தூர்
செழுக்கமலை சீரொற்றி யூர். (௬௭)

விரிஞ்சிபுரந் தீர்த்தகிரி வெண்கா டிடைமருது
சிரபுரங் கோகன்னந் தினம். (௬௮)

ஈச னிருக்குமிட மீதெல்லாஞ் சென்றிறைஞ்சிப்
பாச மறுக்கும் பசு. (௬௯)

முன்னோன் சரிதைமுற்றி முற்கிரியை வந்தணைந்திட்
டுன்னுசுத்தி யைந்தினை யுற்று. (௭0)

பிருத்திகைவிங் கத்தின் விதிப்படியர்ச் சிக்கின்
மரித்தல் பிறப்பகற்று மால். (௭௧)

பால்வண் ணமான படிக லிங்கம் பூசிக்கின்
மால்வண்ண நீங்கு மதி. (எஉ)

மன்னும் படிகத்தின் வாணலிங்க மேயதிகம்
பன்னுசுயம் பாதலிறற் பண். (எங)

மூவிலிங்கத் தும்பூசை முற்றிற் சிவனருளா
லாவியிலிங் கத்தையனை யும். (எச)

திருப்பணியி னலுஞ் சிவபூசை யாலுங்
குருக் காரணமாகுங் குறி. (எரு)

அந்தரியா கப்பூசை யாலு மகந்தெளிந்து
சிந்திதயோ கத்திற் செலும். (எசு)

ஐயெரிநாப் பண்ணின் றனிலந்த னையடக்கித்
துய்ய மதியமுதந் துய்த்து. (எஎ)

ஆதார மாறுங்கண் டப்பாற் பரவெளியி
னாதாந்த வின்பத்தை நாடி. (எஅ)

ஊனமிலா யோகத்தைச் சென்ற னழுக்கியொரீஇ
ஞானத்தைத் தாவுமுயிர் நாடு. (எகூ)

ஈச னருணூலை யெஞ்ஞான்று காண்பமெனு
மாசை பெருகு மற. (அ0)

வினையொப்பு பாகம் வியன்சத்தி பாதந்
தனையெய்து மெய்துந் தரம். (அக)

துறவு மவாவித் துயரும் பிறப்பி
லுறவு மருட்பாலு முறும். (அஉ)

பிறவாமை கள்ளாமை பேணிவெகு ளாமை
மறவாமை மற்றுமரு வும். (அங)

கொல்லாமை தின்னாமை கோள்குறளை சூத்திரங்கள்
சொல்லாமை யாவுந் தொடும். (௮௪)

பாசவெறுப்பும் பரவிருப்பும் வந்தவுயி
ராசானல் முத்தியடை யும். (௮௫)

தந்தைதமர் மேல்வெறுப்புஞ் சங்கரன்றன் மேல்விருப்புஞ்
சிந்தையிடை வந்துதிக மும். (௮௬)

அத்திகழ்வா லீச னருளுருவு கொண்டருளி
முத்தியடை விப்பன் முறை. (௮௭)

பசுவியல் - முற்றிற்று.

---

## பாசவியல்.

---

பாசவிய லைந்து பகுப்பா யிருக்குமதை
யீசனருள் கொண்டியம்பு வாம். (௧)

மலமாயை கன்மமா மாயைதிரோ தாயி
குலமொன்று வேறாங் குணம். (௨)

பாசமறி யாமை பகாரண வம்விச்சை
மூசுபெத்த மூல மலம். (௩)

அனேகவித சத்தியினா லாருயிரை மூடுந்
தினகரனைப் பன்னகம்போற் சென்று. (௪)

அன்னியத்தைக் காட்டி யனன்னியத்தைத் தான்மறைக்கு
மென்னே மலத்தி னியல். (௫)

தண்டுலத்தைச் சில்லுமியுந் தாம்பிரத்தைக் காளிதமு
மண்டுதல்போ லாவிமறைக் கும். (௬)

ஆனை யுலாவு மடவியைப்போ லாருயிராங்
கானிலுலாவு மலங் காண். (எ)

கிஞ்சிக் கியன்மூடன் கேடன் கொடும்பாவி
வஞ்சனித னல்வர் தது. (அ)

பாசன் பெரும்படிறன் பாமரன்றீப ராங்காரி
மாசனித னல்வர் தது. (கூ)

கன்மவிருப்புங் களேபரத்தில் வாஞ்சையுங்
குன்மமலத் தின்றீக் குணம். (கo)

இச்சைவழி சென்றங் கிருவினையை யீட்டிவரல்
கொச்சைமலத்தின் குணம். (கக)

தாட்டுணைக்கீழ் நின்றபினுஞ் சாதிபா ராட்ட லிந்தக்
கோட்ட மலத்தின் குணம். (கஉ)

ஈச னகத்திருக்க வில்லையெனக் கூறலிந்தக்
கூசு மலத்தின் குணம். (கங)

ஆசையுறுங் காலமெலா மாலிங் கனஞ்செய்யு
மாசு மலமா மகள். (கச)

உலகந் தெரியா துபத்தத் தடக்குங்
கலகமலக் கன்னி கை. (கரு)

உண்ண லுறங்க லுயிர்க்கும் பொழுதெல்லா-
மெண்ணைப் பிரியா ளிவள். (கசு)

களமமகப் பெற்றதின்பாற் காயமெனும் பேரனையுஞ்
சென்மிக்கப் பண்ணுந் திரு. (கஎ)

அந்தோ மலத்துயர மாற்றகிலே னாற்றகிலே
னெந்தா யிரங்கா யினி. (கஅ)

கலையாங் கரத்தாலிக் கட்டவிழ்த்தாற் றீதோ
வலரோ வடியேற் கருள். (௧௯)

ஈச னருளுதய காலத் திறக்குமிது
பேசவா மாயைப் பெயர். (௨௦)

மாயை சடமயக்க மதந்தீா மதம்பொய்ம்மை
நாயம் விளக்குக் கணு. (௨௧)

மூல யிருந்தாரை மூத்தத்தில் விட்டதன்றிச்
சாலப் பெருமயக்கந் தான். (௨௨)

பிருதிவியப் புத்தேயு பெருமருத்து வானம்
பொறிபுலன் கன்மேந் தியம். (௨௩)

மனம்புத்தி யாங்கார மாறாத சித்த
மினமான்ம தத்துவமென் றெண். (௨௪)

காலநியதி கலைவித்தை ராகமொடு
மாலும் புருடன்மா யை. (௨௫)

மூன்றான்ம தத்துவமும் பின்வித்யா தத்துவமுஞ்
சின்மாயை யார்தந் திரம். (௨௬)

சுத்தவித்தை யீச்சுரம்பின் சொல்லுஞ் சாதாக்கியங்கள்
சத்திசிவ மைந்துந் தனி. (௨௭)

சிவதத் துவமிதனாற் சேட்டிக்கு மெல்லா
மிவைதந்த மாமாயை யெண். (௨௮)

ஆறாறக் குள்ளா யகப்பட்டுயிர்சுழலு
மாறாப் பிரானை மறந்து. (௨௯)

மயிரெலும்பு தோனரம்பு மன்னுதசையைந்துஞ்
செயிர்ப்புவியின் கூறென்று தேர். (௩௦)

ஓடும் புனலுதிர மொண்சுக் கிலமூளை
கூடுமச்சை யப்புவின் கூறு. (௩௧)

ஆகாரந் தூக்கம் பயமைது னஞ்சோம்பு
நீகாணெ ருப்பின் கூறு. (௩௨)

ஓட்ட நடைகிடத்த லுற்றிருத்த னிற்றலைந்துங்
கூட்டனிலன் கூறென்று கொள். (௩௩)

காமங் குரோதங் கழிலோப மோகமதஞ்
சேமவிசும் பின்கூறு தேர். (௩௪)

வாயுவொரு பத்து மவிநாடி யோர்பத்து
மோயகுண மூன்றக மூன்று. (௩௫)

வசனாதி யைந்தும்பின் வாக்காதி நான்கு
மிசையுந்தொண் ணூற்றாறு மெண். (௩௬)

இதற்குள்ளாயாவி யிறந்து பிறந்தே யுழலு
மதுக்கொன்றை யானை மறந்து. (௩௭)

காய்விளக்களித்த கண்ணுதலை கண்ணி விந்த
மாயைப் படலமறை யும். (௩௮)

நனவின்மூப் பானைந்து நற்கனவி லையைந்து
மூனை சுழுத்தி யிற்கருவி மூன்று. (௩௯)

துரியத்திரண் டாகுந் துரியாதீ தத்திற்
கருவியொன்று மைந்தவத்தை காண். (௪0)

அந்தரங்கத் துள்ளிருந் தரையர்புறம் போதல்போ
லந்தரங்கத் துள்ளாவி யும். (௪௧)

ஆணவத்தான் மூடுண்டு மாயையாற் கிஞ்சிஞ்ஞம்
பூணும்வினை யாற்புருட னும். (௪௨)

குருவையெதிர் தூடித்தல் குற்றமெடுத் தோதல்
குருக்கொல்லன் மாயா குணம். (சங)

பற்றற்றார் கண்ணும் பருவரலைச் செய்வித்தல்
குற்றமிகு மாயா குணம். (சச)

ஈசனிலை யாவியிலை யீசனடி யாரில்லை
மாசகலா மாயா மகற்கு. (சரு)

நூலில்லை கேள்வியில்லை நுண்ணறிவு மில்லையால்
மாலகலா மாயா மகற்கு. (சசு)

ஞானமிலைப் பத்தியிலை நல்லார்கண் ணட்புமிலை
மானமிலை மாயா மகற்கு. (சஎ)

முன்னவன்பா தாம்புயத்தின் முற்று மெனையடைக்கா
தன்னை வயிற்றிலடைக் கும். (சஅ)

மாயை விளக்கவியா தவியமா தேவனருண்
மோரய வெயின் முகிழ்க்கு மோ. (சகூ)

மாயா புரமெரித்த மதிசேக ரர்க்கின்றென்
மாயாபு ரம்வலிதோ மற்று. (ருo)

இம்மாயை நட்ட மெழிற்சோகம் பாவனையாற்
கன்மமலக் கட்டுரைப்பேன் காண். (ருக)

கன்மம் வியாபி கீடம்போற் சடமன்று
சென்மிக்கப் பண்ணுஞ் செயல். (ருஉ)

வல்வினையாந் தாயகட்டில் வந்து பிறந்தனவால்
நல்வினையுந் தீவினையு நாடு. (ருங)

நல்வினையாற் புண்ணியமு நவிறீதாற் றீவினையுந்
தொல்லை வினைக்கேற்பத் தொடும். (ருச)

முற்சொன்ன வூழ்வினையான் முடியா விகாரமுறு
முற்சாக நன்முயற்சி யுற்று. (௫௫)

முயற்சியா லீசனையும் பின்னிட்டு முந்திப்
பயிர்செய்யு மூழ்வினையின் பால். (௫௬)

ஊழ்வினையாற் சஞ்சிதமு மூலவில்பிரா ரத்தமுமேல்
வீழுமா காமியமு மே. (௫௭)

விருப்பும் வெறுப்புமாய் வேண்டல்வேண் டாமை
மரிப்போ டுதிப்பும் வரும். (௫௮)

கறங்குவரி கொள்ளிவட்டங் கடிதிற் சுழல்வண்
டிறங்குலா லன்றிகிரி யொப்பு (௫௯)

மூன்றுகுற்ற மூன்றுகுண மூன்றவத்தை மூன்றுதுக்க
மூன்று பிராரத்த மொழி. (௬0)

காமம் வெகுளி மயக்கமிவை மூன்றும்
வாமச் சமையத்தார் மாட்டு. (௬௧)

சாத்துவிதஞானஞ் சமநிலைய மற்றிரண்டுஞ்
சாற்றி லிருளொளியுந் தான். (௬௨)

சாக்கிரமுஞ் சொப்பனமுந் தணவாச் சுழுத்தியையும்
போக்கிற் றுரியம் பொருள். (௬௩)

ஆன்மீகம் பௌதீக மறையுந் தெய்வீகமிவை
யான்மாவுக் கில்லை யறி. (௬௪)

முன்னைவினைப் பின்னைவினை மூவர் நிகழும்வினை
யுன்னை யணுகாமை யோர். (௬௫)

இச்சைய னிச்சை பரவிச்சை யிம்மூன்று
னிச்சஞ் சுழலு முயிர் நின்று. (௬௬)

தன்னிச்சை யால்வருத ருனிச்சி யாதுறத
லன்னியரால் வந்தடைத லாம். (௬எ)

ஆன்மீகந் தெய்வீக மான பவுதீகந்
தான்மேவு மான்மாத் தனித்து. (௬அ)

மன்னவராற் கள்வரான் மாவாலுறுபிணியா
லின்னலுற லான்மீக மென். (௬௯)

தாயகட்டிற் றங்க றரணிதனில் வந்தழித
லாயிற் றெய்வீக மெனலாம். (எ0)

வானி லிடியான் மழையான்மற் றச்சடத்தா
லூனமுறல் பௌதிகமா மோர். (எக)

சஞ்சிதமுன் கட்டுவினை சற்குருநோக் காற்சரியும்
பஞ்சுமலை பட்ட நெருப்பாய் (எ௨)

உள்ளப் பொசிப்பெல்லா முண்டொழிப்ப தன்றியிதைத்
தள்ளப் படாதெவர்க்குந் தான். (எ௩)

கொடுப்பானு மீசனதைக் கொள்வானு மீசனெனின்
மடுக்காவெதிர் வினைகள் வந்து. எ௪)

ஞானபுலிவாழ்காட்டி னன்னிரலை வாழுமோ
தானசிப்ப தல்லாற் றரித்து. (எ௫)

வறுத்த விதையுண்ப தன்றிமா நிலத்தைக்கின்று
செறித்துவிளைப் பாரோ தெளி. (எ௬)

வெறுப்புவிருப் பாற்பிறப்பா மேலைக்கிப் போதே
வெறுப்புவிருப் பற்றால் விடும். எ௭).

கூத்தியைப்போற் பாலக் குலக்கொடிபோற் புண்ணியக்க
ணீத்தார்க் கிரண்டு நெருப்பு. (எஅ)

நாடுவினை யொப்புவந்த நாதாந்த யோகருக்கிங்
கோடுந் திரவியமு மொன்று. (எக)

இருவினை யொப்புற்ற வுயிரிதயத் தானந்
திருவம் பலமிறைக்குத் தேர். (அ0)

நற்சாதி துர்ச்சாதி நல்லாயுந் தீயாயு
நற்போகந் துர்ப்போக நாடு. (அக)

நல்வினையா னாகம்போந் தீவினையாற் றீரயந்
செல்லு முயிரென் செயும். (அ௨)

நல்லன்சிறு புல்ல னபுஞ்சன் விதுரனெனத்
தொல்கருமத் தார்தந் தொழில். (அ௩)

உன்ன லொருகால்பின் னுரைத்தலிரு காலகனைத்
துன்னன்முக்கா லொன்றே தொழில். (அ௪)

இன்னவகை யெவ்வுயிர்க்கு மேறுயிரு வினைய
முன்ன லொருக்கிலொழி யும் (அ௫)

சற்கன்மத்தாலே தனுவைநா னென்றுவருந்
துர்க்கன்ம மெல்லாந் தொலை. (அ௬)

இக்கன்மத் தாற்றுயர மென்சொல்கே னென்சொல்கேன்
முக்கண்ண நீயே முகிழ். (அஎ)

கன்ம வெயிலகற்றிக் காற்கமல நீழலின்க
ணென்னை யிருத்தா யினி. (அஅ)

அவிகாரி யீச னருளுதய காலஞ்
சவிமாளுங் கன்மமலந் தான். (அகூ)

ஓமாதி வாக்கியமாம் புயிரறிவுக் கூடியமா
மாமாயை தன்னைவருப் பாம். (கூ0)

வேதாக மங்கலைகள் விஞ்ஞானர் மாலாதி
காதர்க் குடலாதி நாடு. (கக)

எண்பத் தொருபதமு மேழ்கோடி மாமனுவு
மைம்பத்தோ ரக்கரமு மாம். (கஉ)

சரிதாதி மூவர்க்குச் சாலோக மாதி
விரிபதமூன் றுருபுமே வும். (கஙு)

இரவிலெழு சந்திரன்போ லென்றாழ்வரு மளவும்
விரியபர ஞானமாம் விந்து. (கசு)

இந்தவிந்து ஞானமின்றே லெவ்வுயிர்க்கு மெஞ்ஞான்றும்
பந்தமுத்தி யில்லையாம் பார். (கஙி)

சிவஞான சூரியன்முற் சீவமதிப் பல்கருவி
யவஞான மீனு மறும். (கசு)

சனகாதி கட்கன்று சாற்றபரம் பொன்ற
வுஞ்தபரஞ் சொன்னவனே யுற்று. (கஎ)

அபர வுணர்வை யறவகற்றி யென்பாற்
சுபரம் வருமாறு சொல். (கஅ)

மாமாயை யீசனருள் மாறுதெதிர்ந் தன்றிப்
போமாறு முண்டோ புகல். (கக)

மறைப்புருவ மாயறிவின் மாறுசெயும் பொல்லாச்
சிறப்புமலஞ் சொல்வார் தெரித்து. (க00)

அன்னை யருட்சத்தி யாவிமலம் பொன்றப்
பின்னைத் திரோதானப் பேர். (க0க)

இருவினையொப் பாவிக் கெய்தளவுஞ் செய்யுந்
திரைமயக்க மாறித் தினம். (க0உ)

மடித்துயிரின் வல்வினையை மாளுதருந்தி
யடித்துப் பாலூட்டு மருள். (௧0௩)

செகத்தை மறைத்துச் சிவங்காட்டிப் பின்ன
ரகத்தை மறையா தருள். (௧0௪)

மலமொழிந்த காலத்து மாறுந்தி ரோதை
சலமில் சிவஞானத் தாய். (௧0௫)

அச்சோ நெடுங்கால மாவிதிகைத் தெய்த்தலைந்தே
னற்சோம சேகரனே நான். (௧0௬)

பஞ்சமலத் தாலிடுக்கண் பட்டுயிர்க ளெஞ்ஞான்று
நஞ்சணிகண் டத்தனை நாடா. (௧0௭)

கோடிசிவ புண்ணியத்தாற் குவியி மனம்பின்னர்
நாடுஞ் சிவனை நனி. (௧0௮)

பாசவியல்-முற்றிற்று.

## பாசமோசனவியல்.

சிவஞான தீக்கையினாற் றிணிமலந்தீர்ந் தாவி
சிவமாதல் சொல்வாந் தெரிந்து. (௧)

அஞ்சு மலத்தாலு மாவிபடுந் துயரம்
வஞ்சிபங்கன் றீக்கையின்மா யும். (௨)

மீன்போற்றிரு நோக்கால் விமல னுருவாக்குந்
தான்போக்கி நின்ற தரம். (௩)

ஆமைபோற் சிந்தித் தருளுருவ மாக்குமாற்
காமாதி நீத்தவரைக் காண். (௪)

கோழிபோற் றீண்டியுயிர்க் குற்ற மறத்தாணு
மாழிவிட மூண்ட வரன். (ரு)

திருநோக்கான் மூலமலந் தீயும் பரிசத்தா
லிருண் மாயைக் கூட்டமிரி யும். (சு)

திருமொழியாம் கன்மமலஞ் சிந்துந் தியானத்தாற்
பெருமாயை போமொழியும் பின். (எ)

வெந்நூலாற வொன்றுந் திரோதையப்பா லாவிச்
சிவதீக்கை யாலாஞ் சிவம். (அ)

பசைநீங்கு மாருயிர்க்குப் பரமசிவ னசொன்ன
தசகாரிய மூறைவன் றன். (கூ)

கருவிசட மென்றவற்றின் கன்மத்தைக் காண்டல்
கருவிக் குருவமெனக் காண். (க0)

தத்துவத்தா ளுமறியோஞ் சாட்சிமைக் கொண்டறித
லுற்றுணர்தல் காட்சியா மூன். (கக)

பாசக் குழுக்குப் பதிநா மெனத்துறத்தல்
பாசசுத்தி யென்னப் படும். (கஉ)

சைதன் னியவுருநா னென்று தமனீங்கல்
சைதன்னிய னுருவந் தான். (கங)

எனைவிடவே றில்லையியானே பரப்பிரம
மெனவுணர்த றற்றெரி சனம். (கச)

சீவனுக்குச் சாக்கி சிவமென் றுணர்தலே
சீவனுக்குச் சுத்தியெனத் தேர். (கரு)

சிவனன்றி யாருயிர்க்குச் சேட்டையிலை யென்னில்
சிவரூப நன்றாய்த் தெளி. (கசு)

எவ்வுயிர்க்கும் போத மிறைமெயன் றறிதலே
செவ்வே சிவதரி சனம். (கஎ)

அந்தச் சிவநம்மை யன்றியிலை யென்றோர்த
லுந்துஞ் சிவயோக மோர். (கஅ)

உவனிவனென் றன்றுதங் கொன்றாகிப் போதல்
சிவயோக மென்றே தெளி. (கக)

பத்துவித காரியத்தா லீரவி பசையற்று
முத்தியிடை நிற்க முறை. (உ0)

பத்தைவிட வுண்டோ பரமபத மாருயார்க்குச்
சித்தைவிட வுண்டோ செயல். (உக)

ஈரைந்து காரியத்தா லிச்சையறு மாருயிர்க
டாரமிழர் தானைத் தக. (உஉ)

உள்ளமொடுங்கி யுரையொடுங்கி யானந்த
வெள்ளத் தழுந்திநிற்கு மேல். (உ௩)

பெத்தத்தை நீங்கிப் பிராணே டிரண்டற்று
முத்தத்தி னிற்கு முதல். (உச)

ஐந்தடக்கி யாறொடுக்கி யம்பரம்போ லொன்றாகிச்
சந்தற்று நிற்குமுயிர் தான். (உ௫)

விமரிசஞா னத்தால் வெறுப்புவிருப் பற்றுச்
சமரசத்தை யெய்துந் தனி. (உ௬)

கண்ணு முயிர்களெல்லாங் காசத்தை மோசித்து
விண்கதிரோ டொன்றாய் விடும். (உஎ)

அறிவி லறிவை யறியா தறிந்து
குறியிறந்து நிற்குங் குலம். (உஅ)

ஐந்தவத்தை யென்றுஞ் மாவரண மற்றதவர்
சிந்தைசிவன் பாலே தெளி. (௨௯)

ஆமயத்தை நீங்கி நிராமயத்தை யாதரிக்கி
னாமயம்போ நீயே யவன். (௩0)

பின்னபின மாய்நோக்கும் பேசிற் கடையிடைக
டன்னையே நோக்குந் தலை. (௩௧)

அவயவமோ நிரவயமோ வான்மா வறியேன்
புவனகுரு நாதா புகல். (௩௨)

உணருமுயி ரில்லை யுடம்பே யுயிரென்
றுணர்வனுலகா யுதன். (௩௩)

நான்பருத்தே னிளைத்தே னென்றுரைக்கு ஞானத்த
லூன்சடல மன்றே யுயிர். (௩௪)

ஊமனொளி யில்லையெனி லொப்புவரோவத்தன்மை
யேமவுயி ரின்றென்பா ரில். (௩௫)

உள்ளே யிருந்த வுயிர்போன தென்றுலகஞ்
சொல்லுவதென் சொல்லோநீ சொல். (௩௬)

அவயவமே காய நிரவயமே யான்மா
வவயவமே தோன்றியழி யும். (௩௭)

கட்டை யடுக்கிக் களேபரத்தை மீதடுக்கிச்
சுட்டிடுவ தென்சொல்லோ சொல். (௩௮)

உடல்கிடக்க வாவி யோடியதென் றியாருங்
கடல்போற் கதறுவதென் காண். (௩௯)

மூட வுடலுயிரோ மூடா விதென்கொலுயிர்
கூடாமோ பக்கிக் குலம். (௪0)

உணர்ச்சியுயி ரில்லையோ வென்றுரைக்குஞ் சொல்லை
யுணராபுலகா யுதா. (௪௧)

ஆக்கையகத் துள்ளேநல் லான்மா வுளதென்று
தூக்கிமறை சொல்லுந் துணி. (௪௨)

இந்தியமே யான்மாவென் றெண்ணு மறிவில்லா
மந்தச் சவலை மதம். (௪௩)

சத்தம் பரிச முருவரச கெந்தத்தை
யுய்த்தறிவான் சீவனென வோர். (௪௪)

இந்தியத்துக் கெல்லா மிறைவ னுயிரன்றி
யிந்தியத்துக் குண்டோ விறை. (௪௫)

ஒன்றறிந்த தொன்றறியா தாலு முயிரல்லை
மன்றலன்றி மூக்கறியா மற்று. (௪௬)

கண்ணுருவ மன்றியொன்றைக் காணறியாக் கையார
வுண்ணலன்றி நாக்கறியா தோர். (௪௭)

காதொலியை யன்றியொன்றைக் காணறியா விவ்வுடம்பு
மோது பரிசமன்றி யுற்று. (௪௮)

ஆகையா லைந்தறிவைக் கொண்டறிவ தான்மாவென்
றோகையொடுஞ் சொல்லுமறை யோர். (௪௯)

செல்லும் பிராணனன்றிச் சீவனிலை யென்றுணர்ந்து
சொல்லுஞ் சுவாசமதஞ் சூழ். (௫௦)

மூக்குறான் மூக்கணியை மூடச் சுழுத்தியினிற்
போக்கடித்த தாமோ பொருள். (௫௧)

பிராணனைமுன் விட்டுப் பிடிப்போன் பிராணனென
வாராவணியான் வேதமறை யும். (௫௨)

மனமே புருடனன்றி மற்றிலையென் றோதுங்
கனமாயா வாதிமதங் காண். (௫௧)

என்மனத்தா லியானொன்றே னென்றுரைக்கப் பட்டமையாற்
றன்மனந்தா னன்று தனி (௫௨)

புத்தியே யான்மாவா மென்றுணராப் போதித்த
புத்திகெட்ட புத்தன்மதம் பொய். (௫௩)

புத்திக்குச் சாக்கியாம் போதமய வான்மா
புத்திசட மாதலினூற் பொய் (௫௪)

ஆங்கார மான்மாவா மென்றுரைக்கும் பேரருளா
ராங்கார வாதமறி. (௫௭)

சடஞ்சித்தத் தாலறியுஞ் சைதனிய னன்றென்
றிடமறைக ளோது மெடுத்து. (௫௮)

சித்தமயமான னென்றுணரேல் சீர்சான்ற
சித்தர்மதம் பின்னிட்டு செல். (௫௯)

சைதனியன் சந்நிதியிற் றானறியுஞ் சிஞ்சிக்கியன்
சைதனிய னுக்குச் சடம். (௬0)

காயமுதற் சித்தங் கடையாமிவை கட்குச்
சேயன்சை தன்னிய சீவன். (௬௧)

சீவனத்தாற் சீவனென்னல் சீவமிறந்தா லிந்தச்
சீவனே யந்தச் சிவம். (௬௨)

தன்னைக் கண்டாங்குத் தலைவனையு முன்னொது
முன்னைப் பிரமமெனு மோர். (௬௩)

ஊனையொதுக்கி யுணர்வாக்கி விட்டபினர்
நானே பிரமமென நாடு. (௬௪)

சொப்பனமுஞ் சாக்கிரமுந் தொலையொத் தகாலத்துச்
சுப்பிரம மென்றுநீ சொல். (௬௫)

நான்பிரம மென்று நடைமலையைச் சிவைபாகன்
றானடக்கி யாட்கொள்வான் றான். (௬௬)

நீபிரமமென்று நெடுநாட் பிறந்திறந்தாய்
மாபிரம மென்னை மறந்து. (௬எ)

ஆதிமுத்தன் சீவ னநாதிமுத்த னீசனென
வேதமுறை செய்யும் விரித்து. (௬அ)

உள்ள மசையா தயர்தருவன் போனிற்கில்
வள்ளலுரு வாணாய் மதி. (௬௯)

சித்திரத்தை யொத்துச் சிவோகமெனச் சிந்தித்தா
லத்தனுரு நீயாவை யால். (எ௦)

இந்நிலையி னிற்பரிதே யெல்லாஞ் சிவமென்று
மந்நிலையி னிற்பா யற. (எ௧)

அஃதுமரி தேயாகி லஞ்செழுத்தி னுண்மைப்
பகுதியறிந் துள்ளே படி. (எ௨)

சொன்ன நிலைக்குட் டிதையா மனமாயின்
முன்னூலை யோதி முயல். (எ௩)

சாத்திரத்தை யோதச் சழக்கு மனமானா
லார்த்தகுரு நாதனை நீ புண். (எ௪)

குருவுருவ முன்னக் கோதகன்றிட் டாவி
பரிபூரணத் துட் படும். (எ௫)

பாசமோசனவியல் - முற்றிற்று.

## சிவயோகவியல்.



அவயோகத் தன்மை யகற்றியலை வில்லாச்
சிவயோகத் தன்மை தெரிப் பாம். (௧)

நதிபாங்கர்ப் பன்னகத்தி னண்ணிப்பத் மாசனத்தில்
வதியாக் குருவை வணங்கி. (௨)

நீர்க்குமிழி மின்னற்கு முண்டுநிலையில்லை
யாக்கைக்கென் றெண்ணி யறிந்து. (௩)

முன்னோ னுரைத்த மொழிநிறுவிப் பற்பலவாம்
பின்னமொழி யெல்லாம் பிரித்து. (௪)

சிவத்தோமசி யுண்ணி னைந்து சிவயோக நிட்டை
சவுக்கியதானத்தேறித் தான். (௫)

அவிரோத வாளா லகங்கரத்தை யட்டிப்
பவரோகத் துக்குப் பயந்து. (௬)

அல்லல் விளைக்கு மவாமனத் தின்வேரை
யொல்லை யகழ்ந்திட் டொரீஇ. (௭)

அகாயனவி காரி யனந்தவா னந்தன்
மகாதேவன் றன்னை மதித்து. (௮)

பதைத்தெழு முள்ளப் பதைப்பைப் பறித்து
மதத்தை யொடுக்கி மறித்து. (௯)

தத்துவத்தைப் பின்னிட்டுச் சகசமல கேவலத்தை
யத்தனருள் கொண்டாங் ககன்று. (௧0)

அமுசோகம் பாவனையை யண்ணியறி வாகிச்
சமுசயத்தீப் பாவனையைத் தள்ளி. (௧௧)

சிவன்வே றுண்ட சிவன்வேறென் றெண்ணுமயற்
பாவனைக்கண் ணுள்ளில் படா. (௧௨)

நதியோடிப் புக்கழுந்து நாட்டம்போ னின்ற
பதியிற் கலந்து பழகி. (௧௩)

அதுவுநுவென் றெண்ணு தறிவோடறிவாய்ப்
பதிதல் சிவயோகம் பார். (௧௪)

ஒன்றென் றிரண்டென்று மூன்று தறங்கியே
யொன்றாத லேசிவயோ கம். (௧௫)

சாத்திரத்தை யுன்னிற் சமாதி குலையு மெனி
னேத்திரத்தும் பாரே னிலத்து. (௧௬)

நவிதநா தங்க ணனிதோன்று மாயின்
சிவனருளைக் கொண்டு செகு. (௧௭)

சுட்டி லசத்தா ரீ சுட்டைப் பிறகிட்டுச்
சுட்டாமற் சுட்டித் தொடர். (௧௮)

ஒளியி லொளியா யொடுங்கி யுருகில்
வெளியில் வெளியாய் விடும். (௧௯)

குறியாக் குறியைக் குறித்துணரப் போகும்
குறியே பிறவிக் குறி. (௨0)

மான்குறிக்கும் வேடனவண் மன்னன் வசவறியா
மான்றாறுய் நின்றதை மாலும். (௨௧)

ஆகாயப் புள்ளறியா வண்டத்தைப் பொய்ச் சார்வை
யோகானு சாரி யுணரார். (௨௨)

அம்புவிழு மங்கோர மாக்கறக்குஞ் சில்காலஞ்
சம்புவின்யோ கத்திற் றரி. (௨௩)

உழுவையரி மாவானை யுரகங் கரடி
தொழும்யோகி தன்னைத் தொடர்ந்து. (உ௬)

திடர்சுகங்க ளெல்லாஞ் சிவனேந்திக் கொள்ளு
மடர்வதில்லை யொன்று மகுரை. (உ௭)

இந்திரனுஞ் சோதித் திடுக்கணுறு வானீத்த
பந்தச் சிவயோகர் பால். (உ௮)

வண்ணப்பயோதரத்து மணியல்குற் பூந்தடத்துங்
கண்ணைக்கொ டாரியோகர் காண். (உ௭)

செத்தசத்தின் கண்ணுமொரு சித்திரத்தி னற்கண்ணு
மொத்திருக்கும் யோகியுயர் கண். (உ௮)

பழிமுனையைக் காட்டுகின்ற பல்லுலகை நோக்காச்
சுழிமுனையை நோக்கித் தொடும். (உ௯)

கண்ணியதீம் பாலைக் கமரிற் கவிழ்த்தற்றே
பண்ணுங் கருமம் படில். (௩0)

அசையாச் சிவயோகத் தானந்த மீதூர்ந்
தசையா வுளமாதி யாங்கு. (௩௧)

அலையற்ற சாகரமோ வவிழ்ந்த கயிற்றூசலோ
வலைவற்ற யோகி யகம். (௩௨)

பல்லூழி யேநரிமைப்பாய்ப் பண்ணுங்கொ லோவெதிர்ந்த
தொல்லூழை வென்ற சுகம். (௩௩)

சாற்சந் திரனோ தடையற்ற வானோ
வரச்சந்த யோகர் மனம். (௩௪)

பொன்னுக்கை கிட்டியுமென் யோகப் புணர்ப்பிலையே
லென்னும் பிறந்து மிலண். (௩௫)

ஊர்ச்சுணங்க னைப்போன்றிங் குண்டிக் கலையோகர்
பார்க்கக் கிடையாப் பரம். (௩௬)

வேணி யழகும் விபூதியுடைப் பூணழகும்
பாணர்க் கிருந்தென் பயன். (௩௭)

வேடப் பொலிவிருந்தென் வேசியர்போ லாடோறு
நீடுசிவ யோகமி னீசர். (௩௮)

துறந்துஞ் சிவயோகந் துன்னாத மூடர்
பிறந்தும் பிறவா தவர். (௩௯)

தண்டிகையுங் கொம்புந் தவசிக் கிலையடா
வம்பர்க்கு வைத்த வழி. (௪0)

உண்டி புசிக்கவோ யோக முஞற்றவோ
வண்டர்பிரான் றந்தனனுக் கை. (௪௧)

ஏழைத் துறந்தா லுலகைத் துறப்பையன்றி
யூழிருக்க நீதுறவி யோ. (௪௨)

வல்லியத்தோல் போர்த்தா வயன்மேயு மாபோல
புல்லர்க்கும் யோகம் பொது. (௪௩)

அணுவுக் கணுவா யகண்டமாய் நின்ற
பணிசெய்ய நீயே பணி. (௪௪)

எங்குமாய் நின்றானை யெக்காலும் பூசித்தே
யெங்குமாய் நிற்கவெனக் கீ. (௪௫)

ஆ இயல் ஐந்துக்குக் குறள் - ௩௭௮.

சித்தாந்ததரிசனம் - முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

